27th March 1961]

*Industrial Disputes (disposal)*

* 1114 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

முதலாளிகளால் குற்றம் சாட்டப்படும் தொழிலாளர்கள் விஷயமாக விசாரணை செய்து தீர்ப்பு கூற தொழில் தகராறு கோர்ட்டுகளிலும் மற்ற தொழிலாளர் நீதி மன்றங்களுக்கும் விடப்படும் கேஸ்களை அதிகபட்சம் ஆறு மாதத்திற்குள்ளாக விசாரணை செய்து தீர்ப்பு அளிக்கவும், அந்த விசாரணை காலத் திற்கு 3-ல் 2 பகுதி சம்பளம் கொடுக்கவும் சட்டம் கொண்டுவர சர்க்காருக்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இல்லை, ஐயா.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்போது தொழி லாளர்கள் திடீரென்று வேண்டுமென்றே பழிவாங்கப்படுகிறார்கள். அதோடு கோர்டுக்கு விடப்பட்ட வழக்குகள் எல்லாம் விசாரணை செய்வதற்கும் பல ஆண்டுகள் ஆகின்றன, அதோடு மீண்டும் அந்த வழக்குகளை கோர்ட்டுகளில் கொண்டுபோகவேண்டியிருக்கிறது, இவைகளையெல்லாம் அமைச்சர் அவர்கள் அறிவார்கள். இதன் காரணமாக தொழிலாளர்கள் பசியும், பட்டினியுமாக இருந்து கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. ஆகவே தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச ஊதியத்தையும், ஆறு மாதத்திற்குள் விசாரணை செய்து முடிக்கவேண்டும் என்பதையும் தீவிரமாக அமுலில் கொண்டு வர அரசாங்கம் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமா என்பதை அறிய வேண்டுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இது நம்முடைய ராஜ்யத்தில் மட்டும் இருக்கின்ற பிரச்னை அல்ல. அகில இந்திய ரீதியில் இருக்கின்ற பிரச்னை. இதைப்பற்றி பார்லிமெண்ட் தான் முடிவு செய்ய வேண்டும். மத்திய அரசாங்கம் இதில் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளும் என்று நாம் நம்பலாம்.

*New Agricultural College (Third Plan)*

* 1115 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) இம் மாநிலத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயக் கல்லூரி ஆரம்பிக்கும் உத்தேசமுண்டா ?

(இ) எங்கே, எப்போது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) The matter is still under consideration.

SRI A. VEDARATHNAM : இந்த விவசாயக் கல்லூரியை தஞ்சையில் ஆரம்பிக்கவேண்டும் என்றும், அதற்கு ஜில்லா போர்டிலுள்ள ரயில்வே செஸ் நிதியை பயன் படுத்திக்கொள்ள